# Ñan̲apānu

## Tokuti 1, pakuti 6

## September 1913

Record no. 2701

Registered No: M. 1032

# ஞானபாநு.

அறிவுடையா ரெல்லா முடைய ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

Vol. 1 } September 1913. { No. 6
தொகுதி. 1. } பிரமாதீச ஹூ புரட்டாசி மீ { பகுதி. 6



PRINTED AT THE "SACCHIDHANANDHA" PRESS,
& PUBLISHED AT 'GNANA BHANU' OFFICE, MYLAPORE,
MADRAS.

# பி. வரதராஜ், ஆயுர்வேத

# ஔஷதசாலை.

## பரங்கிப்பேட்டை.

1. சர்வகடி படைசம்ஹாரன்:—இடுப்பு, தொடையின் இடுக்கு, இந்த
இடங்களில் படர்ந்து, ஓயாத நமச்சலைத் தந்து மற்ற இடங்களிலும் பட
ரும் மேகப்படை, சொரி, யானைபடை, தடிப்புபடை, தேமல், வண்டுகடி,
இவைகளை குணப்படுத்தும். சீசா 1 க்கு விலை அணு 4. 1 முதல் 12 சீசாக்
கள் வரையில் வி. பி. சிலவுகள் அணு 5 பிரத்தியேகம்.

2. லெக்ஷ்மி விலாச கஸ்தூரி மாத்திரைகள்:—இவை தாம்பூலம்
தரிப்பவர்களுக்கு எப்பொழுதும் கையிருப்பில் வைத்துக்கொள்ள வேண்டி
ய விலை உயர்ந்த வஸ்து. சாப்பிட்டபின் ஒன்று அல்லது இரண்டு மாத்
திரைகளை வெற்றிலையுடனாவது தனியாகவாவது உபயோகித்தால் எப்
பேர்ப்பட்ட சாப்பாட்டையும் ஜீரணம் செய்வதுடன் வாயில் அநேகமணி
நேரங்கள் வரை சுகந்த வாசனையைதரும். இம்மாத்திரைகளினால் தந்த
நோய், வாய்நாற்றம், அஜீர்ணம், அக்கினிமாந்தம், மலச்சிக்கல், பித்தவாயு,
நெஞ்செரிவு இவைகள் குணமாகும். அரைக்குழந்தைகள் முதல் விருத்
தாப்பியர்கள் வரை சாப்பிடலாம். ஜன்னியுள்ளவர்க்குக் கொடுக்க ஜன்னி
தீரும். பிரசவகாலத்தில் வெற்றிலையுடன் இரண்டு முதற்கொண்டு நாலு
மாத்திரைகள் வரையில் கொடுக்க ஜன்னி கிட்டநாடாது என்பது நிச்ச
யம். இதில் லாகிரி முதலான அபாயகரமான வஸ்து சேரவில்லை. காஷ்
மீர் தேசத்திலிருந்து நேராக வரவழைக்கப் பெற்ற கஸ்தூரி, குங்குமப்பூ,
பச்சைக்கர்ப்பூரம், தங்கரேக் முதலிய அநேக விலை உயர்ந்தமருந்து
சாமான்களும் வாசனைத் திரவியங்களும் சேர்த்து செய்யப்பட்டிருக்கிறன.
நீடித்த அக்கினிமந்தம், மலச்சிக்கல், வயிற்றுவலி, இவைகளை கண்டிப்ப
தற்கு கைகண்ட ஔஷதம். சளி, இருமல், காசம், காலரா, பிளேக், சுரம்,
இவைகளுக்கு மிகவும் கைகண்டமருந்து. குழந்தைகளின் வயதுக்கும்
தேகத்திற்கும் தக்கபடி 1 முதல் 4 வரையில் வெற்றிலைச் சாற்றிலாவது
இஞ்சிசாற்றிலாவது துளசி சாற்றிலாவது கொடுக்க சளி, இருமல், சுரம்,
மாந்தம் முதலானவைகள் தீரும். சுமார் 200 மாத்திரைகளுக்கு மேல்
அடங்கிய சீசா 1 க்கு விலை அணு 4. 1 முதல் 10 சீசாக்கள் வரையில்
வி. பி. சிலவு அணு 5 பிரத்தியேகம்.

3. சர்வ தந்தரோக நிவாரண பரிமளபல்பொடி:—பிரதிதினம்
பல்துலக்கி வருவதினால் பல்வலி, இரத்தம் வருதல், பல்கூசல், பல் அசை
தல், ஈர்சுரப்பு, வாய்நாற்றம், புழுவிழுதல், பல்சொத்தை, பைத்தியத்தினால்
உண்டாகும் பல்அரணை, ஈர்தடித்தல் முதலிய வியாதிகளுக்கு இதுமுதன்
மையான சஞ்சீவி. பல் சுத்தமாய் துலக்குவதோடு, பற்களை கெட்டிப்படு
த்தி பல்தேயாமலும், கருக்காமலும், பற்களுக்கு ஒரு ஜோதியை உண்டாக்
கும். விலை சீசா 1 க்கு அணு 2. 1 முதல் 3 சீசாக்கள் வரையில் அணு 5
பிரத்தியேகம்.

4 விஷ்ணு பராக்கிரமதிலா:—இந்தமருந்து அநேகம் சுதேச
வயித்தியர்களால் பரிசோதிக்கப்பெற்று உலகமெங்கும் பிரசித்திபெற்றிரு
க்கிறது. தலைநோய், ஒற்றைத்தலை நோய், இவைகளுக்கு இரண்டு தலை
யின் பொ றிகளிலும் தேய்க்க பூரண சுகத்தைக் கொடுக்கும். இடுப்புநோய்,
பக்கசூலை, பாரிசவாய்வு, முடக்கம், கணுக்களில் வீக்கம், பிடிப்பு, மார்பு
நோய், முதலிய வியாதிகளுக்கு அந்தந்த நோயுள்ள இடத்தில் தடவி நன்
றாய் தேய்க்கவேண்டும். பூரான்கடி, தேள், நண்டுசெற்றும்கால் இவை



களுக்கு கொட்டின அல்லது கடித்த இடத்தில் தேய்த்தால் உடனேகுணப்படும். விலை சீசா 1 க்கு அணு 7. 1 முதல் 6 சீசாக்கள் வரையில் அணு 5 பிரத்தியேகம்.

5. மஹா சந்தனாதி தைலம்:—பரிமள மிகுந்தது. குணத்திற் சிறந்தது. இத்தைலத்தை வார மிருமுறை ஸ்நானம் செய்து வந்தால் கபாலத்திலுள்ள எல்லா வியாதிகளையும் கண்டிக்கும். பித்த நீரானது சிரசுக்கேறி அதனால் கண்மறைப்பு, கண் எரிச்சல், கண்குத்தல், சதைபடர்தல், கண்ணில் நீர்வடிதல், பூவிழுதல், இமைவேட்காடு, கழுத்து இசிவு, காதுவலி, தேகவரக்ஷி, வைசூரி கிரந்திகள், கோடைக்கொப்பளம், நமைச்சல், சொரி சிறங்கு, மேகஊறல், இரத்தக்குறைவு, பித்தபாண்டு, பித்தவெட்டை, வெட்டைச்சூடு, நீர்எரிச்சல், பித்தமயக்கம், சித்தப்பிரமை, அஸ்திசுரம், சீதாத்தபேதி, பீனிசம், சரீரத்தில் உண்டாகும் சற்றுழை நாற்றம், இவைகளை நிவர்த்திசெய்து, மூலக்கொதிப்பை அடக்கி மயிர் உதிராமல் காத்து கூந்தலை வளரச்செய்து கண்களுக்கு குளிர்ச்சியை தரக்கூடியது. உத்தியோகஸ்தர்களும், மாணுக்கர்களும் பிரதிதினம் காலையில் காலணுஇடை சிரசில் தேய்த்துக்கொண்டு வந்தால் கபால உஷ்ணத்தை தணிக்கும். சீசா 1 க்கு விலை அணு 6. வி. பி. சிலவு அணு 5 பிரத்தியேகம். 12 அவுன்ஸ் சீசா 1 க்கு விலை ரூ 2-4-0. 24 அவுன்ஸ் சீசா 1 க்கு விலை ரூ 4-8-0. வி. பி. சிலவு பிரத்தியேகம்.

6 பிரமேக நிவாரணசஞ்சீவி:—மேகவெள்ளை, இரத்தவெட்டை, சீழ்ரத்தம் வருதல், நீர்த்தாரை எரிவு, மஞ்சள் வெள்ளை, வெட்டைதந்திமேகம் முதலிய வியாதிகளை ஆண் பெண் இருதரத்தார்களுக்கும் எத்தனைநாள் பட்டதாயிருந்தாலும் சொஸ்தப்படுத்தும். 24 வேளை அடங்கிய டப்பி ஒன்றுக்கு விலை ரூ. 1—0—0 வி. பி. செலவு அணு பிரத்தியேகம்

7. பக்ஷவாத சம்ஹாரி என்னும் மஹாமேழுகுதயிலம்:—வாதம் 80ல் பக்ஷவாதம், திமிர்வாதம், நடுக்குவாதம் தொவட்டல்வாதம், முதலிய இக்கொடிய வியாதிகளும் வாயு சம்பந்தமான திரேகத்தில் குளிர்ச்சி சம்பந்தப்பட்டு, சயித்தியநீர் மூளையில் சம்பந்தப்பட்டு கை, கால், நரம்புகளில் தங்கி அதனால் கை, கால், சொறணை அற்றுப்போதல் முகம் கழுத்துஇழுத்தல், நாக்கு இழுத்தல், வாய்குளறல், முகம்கோணல், மார் அடைத்தல் முதலிய வியாதிகளுக்கு மேலுக்கு தேய்க்க இத்தயிலமே சிறந்த சஞ்சீவி. இது சாஸ்திரமுறைப்படி அநேக மூலிகைசத்துக்களும், உயர்ந்த கஸ்தூரி, குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம், முதலியது சேர்த்து செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் ஸ்திரீகளுக்கு பிரசவகாலத்தில் காணும் ஜன்னி இசிவு இதுகளுக்கு உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகப்படுத்த சிறந்தகுணத்தைக் கொடுக்கும். இத்தயிலம் மற்றெல்லா தயிலங்களைவிட மிகவும் சிறந்தது. 1 அவுன்ஸ் சீசாவின் விலை 12. வி. பி. செலவு 1 முதல் 3 வரையில் அணு 5 பிரத்தியேகம்.

முக்கிய குறிப்பு:—கடிதம் எழுதும் நேயர்கள் தங்கள் விலாசத்தை நன்கு தெரிவிக்க. பெயர், ஊர், போஸ்ட் ஆபீஸ், ஜில்லா, இவைகளைத் தெளிவாய் எழுத வேண்டியது. நேரில் வந்தாலும் நாடிகளைப் பரிசோதித்து வியாதிகளைக் கண்டறிந்து தக்கமருந்துகள் கொடுக்கக் கூடும். இதில் விளம்பரப்படுத்தாத அநேக மருந்துகள் என்னிடத்தில் உண்டு.

விலாசம்:—

பி. வரதராஜ், பரங்கிப்பேட்டை, தென்னாற்காடு ஜில்லா.

# சந்தனாதித் தைலம்.



இச் சந்தனாதித் தைலத்தின் அருமையும், பெருமையும் எவருக்கும் தெரியும். பெருமைவாய்ந்த இவ்வற்புதத் தைலத்தை பெரியோர்களும், சிறியோர்களும், ஆண், பெண்களும் எந் தேசத்திலும் யாதொரு சந்தேகமின்றி ஸ்நானம் செய்து அதின் நற்சுகம் அடைந்து ஆனந்தம் பெறக்கருதியே சொற்பவிலைக்கு கொடுத்து கீர்த்திக்கு எதிர்பார்க்கிறோம். வாரம் இருமுறை காலை 7-மணிக்குள் வென்னீர் சீயக்காயுடன் ஸ்நானம்செய்து உடனே போஜனம் செய்யவேண்டும். ஒரு வாரம்வரை சுகந்தம் மாறாது.

| | | | | |
|---|---|---|---|---|
| 18 - பலம் பிடித்த டின் 1 - க்கு ரூ. | | 2 | 0 | 0 |
| கால் டஜன் | ,, | 5 | 10 | 0 |
| அரை டஜன் | ,, | 10 | 8 | 0 |
| டஜன் 1 - க்கு | ,, | 20 | 0 | 0 |

வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

பினாங்கு சிங்கப்பூர் முதலிய வெளி நாடுகளுக்கு வி. பி. யில் அனுப்ப முடியாதாகையால் அடியிற்கண்ட விவரப்படி முன் பணம் அனுப்பவேண்டும். 18-பலம் பிடித்த டின் 1-க்கு ரூபா 3 கால் டஜன் ரூபா 8 - 8. அரை டஜன் ரூபா 16; டஜன் ரூபா 29 - 8.

அரகஜா, அம்பர், புனுகு, ஜவ்வாது, கேசர் பவுடர், வில்லை ஊதுவத்தி, அத்தர், வாசனைப்பாக்கு, வாசனைச்சுண்ணாம்பு, தேன் காச்சீவல், வாசனைசந்தனம், சென்டுகள், ரோஜாப்பூ குல்கந்து பலவித காய்கறி ஊறுகாய்கள் முதலிய சாமான்களும் இந்தக்கம் பெனியில் கிடைக்கும். காட்லாக் இனாமாக அனுப்பப்படும்.

*K. R. V.* & Co., ஸ்ரீனிவாசய்யங்கார்,

அத்தர் வியாபாரம், கும்பகோணம்.

# ஞானபாநு.

VOL - I. தொகுதி - க. | SEPTEMBER 1913. பிரமாதீச ஹூ புரட்டாசிமூ | NO - 6. பகுதி - சு.

## பார்த்தசாரதியே பாரதசாரதி.

இதுகாறும் இவ்வுலகில் அவதரித்துள்ள அவதார புருஷர்களில் ஈஸ்வரனுடைய பூர்ணாம்சம் பெற்று விளங்கிய ஸ்ரீ கிருஷ்ணாவதார மஹிமாப் பிரபாவங்களே ஜன்மசாபல்யம் அளிக்கத் தக்கனவென்று ஆன்றோர் அறைகின்றனர். நமது ஹிந்து மதத்திற்கு அஸ்திவாரங்களாய்க் கூறப்படுகின்ற பிரஹ்ம சூத்திரம், உபநிஷத்துக்கள், பகவத்கீதை என்ற பிரஸ்தானத் திரயத்தில், கிருஷ்ணாவதார கம்பீர சாராம்சமாகிய பகவத்கீதை மிகவும் விசேஷப் பெருமை யுடைத்து என்று நாம் நினைக்கின்றோம். தலையின்றித் தாளின்றிக் கண்ணின்றிக் காதின்றி யாதொருவித அவயவ வேறுபாடு மின்றி உருட்டிப் பிடித்து வைத்திருக்கும் உண்டைபோல, எழுவா யின்றிப் பயனிலை யின்றி இரண்டொரு வார்த்தைகளில் பிரஹ்மசூத்திரங்கள் அமைந்துள்ளன. உபநிஷத்துக்களோ ஏகமேவாத்விதீயமாய் எங்கும் நிறைந்து தானேதானாகி விளங்கும் பிரஹ்மவஸ்துவைப்பற்றியே கோஷிக்கின்றன. ஆகையால் பிரஹ்மசூத்திரம், உபநிஷத்துக்கள் இவ்விரண்டும் பிரபஞ்சதர்மத்தை விட்டு விலகியுள்ள புத்தியிற் சிறந்த புநிதர்களும் பக்தியிற் சிறந்த பண்டிதர்களுமே கையாளத் தக்கனவென்று நன்குபுலப்படுகின்றது. பகவத்கீதையோ பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்கட்கும் அநுகூலமாய் நின்று அவரவரது அபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொடுத்து அழியாப் பதவியை அளிக்கவல்லது.

நமது ஜனங்கள் பகவத்கீதையைப் பிரஸ்தானத்திரயத்தில் ஒன்றாகப் பாவித்து வருகிறார்களே யொழிய, அதிலடங்கியிருக்கும் விசேஷரஹஸ்யங்களைக்கவனிப்பவரைக்காணோம். பிரஹ்மசூத்திரமும், உபநிஷத்துக்களும் ஒவ்வொரு மனிதனுடைய துக்கநிவர்த்திக்கும் ஆநந்தப்பிராப்திக்கும் வழிகாட்டிகளாகு மானால் பகவத்கீதை வியஷ்டிரூபமாகிய ஒவ்வொரு மனிதனுக்கும் சமஷ்

டிரூபமாகிய ஒவ்வொரு ஜனசமுகத்திற்கும் வழிகாட்டியா யிருக்கின்றது. பகவத்கீதையின் பதினெட்டு அத்தியாயங்களையும் பாராயணம் செய்து பலனையடைய விரும்பும் பண்டிதர்கள் நமது ஜனசமுகத்தில் பகவத்கீதையை அனுபவத்திற் பரவச் செய்யவேண்டும். இவ்வுத்தமோபதேசத்தை உலகின் பொருட்டுச் செய்தருளிய ஸ்ரீ கிருஷ்ணனே தண்டகாரண்ணியத்திலோ, நைமிசாரண்ணியத்திலோ காய் கனி கிழங்குகளைத் தின்று காலங்கழிக்கும் மஹரிஷியன்று; நதி தீரங்களிலோ, பர்வத குகைகளிலோ கண்மூடிக் கலக்கமற்று, பிரபஞ்ச சுகபோகங்களை வெறுத்து பிரஹ்ம நிஷ்டையில் எழுந்தருளியிருக்கும் பிராஹ்மணனன்று. ஆனால் க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்து ராஜ போகங்களை அநுபவிப்பவர், கோபிகா ஸ்திரீகளின் ஹிருதயங்களைக் கொள்ளைகொண்டு கூத்துக்களாடினவர். இவரே குரு.

இவ்வுத்தமோபதேசத்தைச் செவி யேற்கும்படியான பாக்கியம் பெற்ற பார்த்தனே சாதனசதுஷ்டய சம்பந்நனாகிய முமுட்சுவன்று; இக்காலத்தில் நாகரிகப்பித்துப் பிடித்துக் குயுக்தி நியாயங்கள் பேசி, தாம் பேசுவதே சரியென்று எல்லாருடைய மனத்திலும் படும்படி செய்து ராஜரீக தர்மங்கள், ஜனசமுக நியாயங்கள் இவற்றைச் சரமாரியாகப் பொழிந்து உலகத்தை உண்மையென்று நம்பி உழலும் ஜனங்களைப் போல, அக்காலத்திலும் அநேகர் இருந்தனர். இவர்களில் அர்ச்சுனனும் ஒருவனே. இவன் ஜனன மரண துக்கத்திற்குப் பயந்து 'வெய்யில் சகித்திடாப் புழுப் போல்வெம்பி,' ஸ்ரீகிருஷ்ண பகவானைச் சரணாகதியா யடைந்தவனன்று. அங்கம், ஆப்தம், ஸ்தானம், ஸத்பாவம் என்ற நான்கு விதங்களால் ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பணிவிடை செய்தவனன்று.

இன்னும் அர்ச்சுனனுடைய சிற்றின்பாநுபவங்கட்கெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணன் ஆதி முதல் அநுகூலமா யிருந்தார். மதுரை மாநகர்க் கரசியாகிய மங்கையை அர்ச்சுனனுக்கு அமைத்துவைத்ததும் இவரே. தமயன் அறியாமல் தன் தங்கையைக் காண்டீபனுக்குக்கல்லியாணம் செய்வித்ததும் இவரே. பார்த்தனுடைய பலவித சில்லறை விளையாடல்களுக்கெல்லாம் அவன் பக்கம் இருந்து துணை புரிந்ததும் இவரே. இடையா, மடையாவென்று அர்ச்சுனன் இவரைப் பரிகாசமாகக் கூப்பிட, இவ்வார்த்தைகளையெல்லாம் இன்புடன் ஏற்றுக் கொண்டவரும் இவரே.



நிற்க, ஸ்ரீ கிருஷ்ணன் பகவத்கீதையைப் பார்த்தனுக்கு உபதேசம் செய்த சந்தர்ப்பமோ மிகவும் வியக்கத்தக்கது. கௌரவர்களும் பாண்டவர்களும் யுத்த சந்நத்தர்களாய், ஒவ்வொருவருடைய சரீரத்திலும் ரத்தம் கொதித்துக் கொண்டிருக்கின்றது. கத்தி கேடயங்களெல்லாம் பளபள வென்று மின்னல் வெட்டுப்போல் மின்னுகின்றன. வீரர்களெல்லாரும் வில்லெடுத்த கையினராய் வேங்கைகள் போற் சீறி நிற்கின்றனர். எங்கு பார்த்தாலும் யுத்த பேரிகைகள் முழங்குகின்றன. வீர வாதங்களும் சபதங்களும் ஒலிக்கின்றன. சர்வலோக சம்ஹார கர்த்தாவாகிய ஏமனானவன் மிகப் பயங்கரமான உருக்கொண்டு கால காலனாய்க் களத்தினிற் பிரவேசித்திருக்கின்றான். எக்காளங்களும் கொம்புகளும் தப்பட்டைகளும் ஒலியும் எதிரொலியுமாய் நிறைந்தன. ஆ! ஆ! உபசாந்தி பெறுதற்கு உத்தமோபதேசம் செய்யும் இடம் இது தான்! ஆகையால் குரு, சிஷ்யன், உபதேச சந்தர்ப்பம் இவைகளையெல்லாம் கவனிக்கும்பொழுது, பகவத்கீதையில் ஏதோ விசேஷ ரஹஸ்யம் அடங்கி யிருக்கின்றதென்பது வெளிப்படையாகின்றது.

(இன்னும் வரும்)

சிவம்.



## மனத்தின் தன்மையும் வன்மையும்.



(ஸ்ரீ வ. உ. சிதம்பரம்பிள்ளை யவர்கள் எழுதியது.)

மனம் வாழ்வை விதிக்கும் இறை; நிலைமைகளைச் சிருஷ்டித்துத் திருத்தும் கர்த்தா; தனது சொந்தப் பலன்களை அநுபவிக்கும் போக்தா; பொய்யைச் சிருஷ்டிக்கும் திறனும் மெய்யைக் காணும் திறனும் மனத்திற்கு உண்டு. ஆன்றோரும் "மனத்தானாமாந்தர்க்குணர்ச்சி" என்று கூறியுள்ளார்.

மனம் தளர்ச்சியின்றி விதியாகிய வஸ்திரத்தை நெய்து கொண்டிருக்கிறது; நினைப்பு நூல்; நல்ல செயல்களும் தீயசெயல்களும் பாவும் ஊடும்; ஒழுக்கம் வாழ்வாகிய தறியில் நெய்யப்படும் துணி. மனம் தான் நெய்த வஸ்திரத்தால் தன்னை உடுத்திக் கொள்கிறது. ஆன்றோரும்,

"புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொரு—ளெண்ணுங்கா
லீதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல்"

என்று கூறியுள்ளார்.

மனிதன் மனத்தையுடைய உயிராகையால் மனத்தின் சகல சக்திகளையும் உடையவனா யிருக்கிறான். தான் விரும்புவனவற்றையெல்லாம் அடைதற்குத் தக்க கருவிகளைக் கொண்டிருக்கிறான். அவன் தனது அநுபவத்தினால் கற்கிறான்; அவன் தனது அநுபவத்தை வேகப்படுத்தவும் தாமதப்படுத்தவும் கூடும். அவன் பிறரால் எந்த இடத்திலும் கட்டுப்பட்டிருக்கவில்லை; ஆனால் அவன் தானே தன்னைப் பல இடங்களில் கட்டியிருக்கிறான்; அவன் தானே தன்னைக் கட்டியிருப்பதால், அவன் நினைத்த மாத்திரத்தில் தானே தன்னை அக் கட்டிலிருந்து நீக்கிக் கொள்ளக் கூடும். அவன் தான் விரும்புகிறபடி தூர்த்தனோ அல்லது தூயனோ, கீழ்மகனோ அல்லது மேல் மகனோ, மடையனோ அல்லது அறிஞனோ ஆகக்கூடும். அவன் திரும்பத் திரும்பச் செய்து சுபாவங்களை உண்டுபண்ணிக் கொள்ளலாம்; அவன் அவற்றிற்கு மறுதலையான செயல்களை மேன்மேலும் செய்து அச்சுபாவங்களை அழித்துவிடலாம். அவன் மெய்ப்பொருள் முழுவதும் தனக்கு மறைபடும் வரை தன்னைச் சுற்றிப் பொய்களை அமைத்துக் கொள்ளக்கூடும்; அவன் மெய்ப்பொருளைப் பூர்த்தியாகக் காணும்வரை தன்னைச் சுற்றியுள்ள பொய்களை ஒன்றன்பின் ஒன்றாக அழித்துவிடக்கூடும். அவன் செய்யக்கூடியன அளவற்றன; அவன் பூரண ஸ்வதந்தரத்தை யுடையவன். ஆன்றோரும்

"நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு—நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்."

என்று கூறியுள்ளார்.

தனதுசொந்த நிலைமைகளைச் சிருஷ்டித்துக் கொள்வதற்கும், தான் வாழ்வதற்குத் தக்க நிலைகளைத்தெரிந்து கொள்வதற்கும் ஏற்ற சக்தி மனத்தினிடத்தில் உண்டு. மனம்எந்தநிலைமையையும் மாற்றுதற்கும், எந்தநிலைமையையும் அழியவிடுதற்கும்



வல்லமையுடையது. அது பலநிலைமைகளை ஒன்றன்பின் ஒன்றாகத் தெரிந்தும், அநுபவித்தும், அவற்றின்ஞானத்தை அடையும்காலையில் தனது நிலைமைகளை ஒன்றன்பின் ஒன்றாக மாற்றிக்கொண்டும் கைவிட்டுக்கொண்டு மிருக்கிறது. ஆன்றோரும்,

"கெடுக்கவல்லதுங் கெட்டவர் தங்களை
யெடுக்க வல்லது மிம்மனம்."

என்று கூறியுள்ளார்.

உள்நோக்கும் நினைப்புக்கள் ஒழுக்கத்தையும் வாழ்வையும் உண்டுபண்ணுகின்றன; மனிதன் நினைப்புக்களைத் தனது விருப்பத்தாலும் முயற்சியாலும் திருத்திக்கொள்ளவும் மாற்றிக்கொள்ளவும் கூடும். சுபாவமும், சக்தியின்மையும் பாவமுமாகிய தளைகள் தன்னாலேயே யுண்டு பண்ணப்பட்டன; அவை தன்னால்மாத்திரம் அறுக்கப்படக்கூடும்; அவை ஒருவனுடைய மனத்திலன்றி வேறெங்கும் இல்லை; அவை புறப்பொருள்களோடு சம்பந்தப்பட்டிருந்தபோதிலும், அவை உண்மையில் அப் புறப்பொருள்களின்கண் இல்லை. புறம் அகத்தால் ஆக்கவும் திருத்தவும் படுகிறது அகம் ஒருபோதும் புறத்தால் ஆக்கப்படுவதும் திருத்தப்படுவதும் இல்லை. பாவநிமித்தம் புறப்பொருளில் இல்லை, ஆனால் அப்பொருளின்மீது மனம் கொண்டிருக்கிற ஆசையில் இருக்கிறது. துன்பமும் துக்கமும் புறப்பொருள்களில் அல்லது வாழ்வின் சம்பவங்களில் ஒட்டிக்கொண்டிருக்கவில்லை; ஆனால் அப்பொருள்களை அல்லது அச்சம்பவங்களைப்பற்றிய மனத்தின் ஒரு ஒழுங்கற்ற தன்மையில் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. தூய்மையால் ஒழுங்குசெய்யப்பட்டு, ஞானத்தால் பலப்படுத்தப்பட்ட மனம் பிரிக்கக் கூடாதவண்ணம் துன்பத்தோடு கட்டப்பட்டுள்ள சகல கலக்கங்களையும் அவாக்களையும் ஒழித்து தெளிவையும் அமைதியையும் அடைகிறது.

பிறரைக் கெட்டவர் என்று தீர்மானித்தலும், கெடுதிக்கு மூலம் புறநிலைமைகளென்று எண்ணி அவற்றோடு போராடுதலும் உலகத்தின் துன்பத்தையும் அமைதியின்மையையும் அதிகப்படுத்துவதைத்தவிரக் குறைப்பதில்லை. புறம் அகத்தின் நிழல், அகத்தின் காரியம். அகம் சுத்தமா யிருக்கும்பொழுது புறத்திலுள்ள சகல காரியங்களும் சுத்தமாயிருக்கின்றன. ஆன்றோரும்

"கற்றதங் கல்வியுங் கடவுட் பூசையு
நற்றவ மியற்றலு நவையி லூனமு
மற்றுள வறங்களு மனத்தின் பாலழுக்
கற்றவர்க் கேபய னளிக்கு மென்பரால்."

என்று கூறியுள்ளார்.

சகலவளர்ச்சியும் அகத்திலிருந்தே நிகழ்கின்றது; சகலதிருத்தங்களும் அகத்திலேசெய்யப்படவேண்டும். எவன்பிறரோடு போராடுதலை விட்டுத்தனதுமனத்தைத் திருத்துவதிலும், பலப்படுத்துவதிலும், வளர்ப்பதிலும், தனது சக்திகளைப் பிரயோகிக்கிறானோ அவன் தனது சக்திகளையெல்லாம் ஒருமுகப்படுத்தித்தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுகிறான்; அவன் தனது மனத்தைச்சமநிலையில் நிற்கச்செய்த பொழுது, தனதுநினைப்பாலும் அறத்தாலும் பிறரையும் அந்தநல்ல நிலைமைக்குக் கொண்டுவருகிறான்; ஏனெனின், ஒருவன் பிறருடைய மனங்களை நடத்துவதும் ஆளுவதும் ஞானத்துக்கும் சாந்திக்கும் வழிகள் அல்ல; தனதுசொந்தமனத்தின்மீது தனதுநியாயமான அதிகாரத்தைச் செலுத்துவதும், உயர்தர ஒழுக்கங்களாகியநேர்மார்க்கங்களில் தன்னைநடத்துவதும் ஞானத்துக்கும் சாந்திக்கும் வழிகள்.

ஒருவனுடைய வாழ்வு அவனது அகத்தினின்று, அவனது மனத்தினின்று, வருகிறது. அவன் அந்தமனத்தைத்தனதுசொந்தநினைப்புக்களையும் செயல்களையும் கலந்து உண்டு பண்ணியிருக்கிறான். அவன் வேண்டும் நினைப்பைத்தெரிந்து கொண்டு தனது மனத்தைத்திருத்தும் சக்தியை உடையவன். ஆகையால் அவன் தனது வாழ்வையும் திருத்திக்கொள்ளக் கூடும். ஆன்றோரும்

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

என்று கூறியுள்ளார்.



## ஓர் உத்தமபுருஷரின் உபசேம்.



(பிரஹ்மஸ்ரீ கே. ரெங்கசாமியய்யங்கா ரவர்கள் எழுதியது).

நீமாத்திரம் தனிமையாயிருந்து லாபமடையவேண்டுமென்று கருதாதே. நிஷ்பலமான தியானத்தில்பிரவர்த்தித்து ஸதா மூலையில் உட்காராதே. உன்னைநீ காப்பாற்றிக்கொண்டால் போதும் என்று நினையாதே. நிஷ்காம்யமாய் ஈஸ்வரார்ப்பணமாய்ப் பிரபஞ்சத்திற்குச் செய்யும்நன்மையைத்தவிர மோக்ஷத்திற்கு வேறுமார்க்கமிருப்பதாக எந்தமதமும் சொல்லவில்லை. உலகத்திற்கு உழைக்காமல் மோக்ஷத்திற்குவேறு ஸுலபமானவழி இருப்பதாக நம்பி மோசம்போகாதே. உலகத்தின் வழியாய்த்தான்மோக்ஷமடையவேண்டும். பிறரைக்காப்பாற்ற முயல்வது ஒன்றே தான்தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும்வழி. நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்ள என்னசெய்திருக்கிறாய்? என்று கடவுள் நம்மைக்கேட்கிறதில்லை. "உன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட ஸஹோதர ஜீவன்களுக்குஎன்னநன்மைசெய்தாய்? என்றுதான் அவர்நம்மைக்கேட்கிறார். ஆகையால் தன்னைமறந்து உலகத்தின் ஸுகத்தைக்கருதி உழை. உன்னுடைய ஆத்மாவை பகவானுக்கும் அவருடைய நியதிக்கும் ஒப்புவித்துவிடு. பிறருடைய நன்மைக்காக இரவும்பகலும் ஓயாமல் உழை. சகலஜபதப விரதங்களும் அதுவே. ஈஸ்வரனுக்கு எண்ணம், கிரியை இரண்டும் ஒன்றே. உன்னாலியன்றவரையில் அவரைப்போல் அனுஷ்டிக்கப் பிரயத்தனப்படு. பிரபஞ்சத்தினின்றும் அதன் கர்த்தாவை வேறாகப்பிரித்து அவரைமாத்திரம் தியானம் செய்யமுயலாதே. பிரபஞ்சமும் கடவுளும் வெவ்வேறன்றாதலால் அவரைத்தனியாய்ப் பிரிக்கமுடியாது. கடவுளை அவருடைய லீலையாகிய பிரபஞ்சத்தில் தான் தரிசிக்கலாம். ஆகையால் உடல்பொருள் ஆவியைப் பிரபஞ்ச நன்மைக்கு அர்ப்பணம்செய். பிரபஞ்சம் மகத்தாயிருக்கிறதே! நானே அணுவளவு கூடஇல்லையே; நான் என்னசெய்வேன்! என்று ஏங்காதே. அவருடைய அம்சம் உன்னிலும் இருக்கிறபடியால் நீ அவரையடையப் பாத்திரன். அவருடைய காரியங்கள் தான் நமக்குக் குரு. அப்படியில்லாத பக்ஷத்தில் அவருடைய லீலா விபூதியாகியபிரபஞ்சத்தை நம்மைச்சுற்றிலும் எதற்காகவைத் திருக்கிறார்? அவைகளிலிருந்து அவருடைய நோக்கத்தை அறிந்துகொள். ஒருஅணுமாத்திரமாவது நாம் அறிந்து கொண்டால் சிருஷ்டியில் அந்தராத்மாவைத்தர்சித்தவர்களாவோம். மூடகர்வத்தை விட்டுவிட்டும் மகா அடக்கமுள்ளவன் போல் வேஷம்போடாமலும்பிரபஞ்சத்தின் சரித்திரத்தை மனப்பூர்த்தியாய்ப்படித்துப்பார். அதில் நமக்கென்னவிளங்குகிறது? நாளுக்குநாள் உலகம் அபிவிர்த்தியாய்வந்திருக்கிறது என்றுவிளங்கவில்லையா? உன்மனமானது ஈஸ்வரன் வஸிப்பதற்குள்ள ஒருபரி

சுத்தமான ஆலயம் என்பதை ஸதா ஞாபகத்தில்வைத்து, அதில் காமக்ரோதாதிகளாகிய அழுக்குகள் சேராமல் ஜாக்கிரதையோடிருந்து அன்பாகிய எண்ணெய்வார்த்து ஸத்தியமாகிய விளக்கை ஏற்றி அவ்விளக்கு அணையாமல் வைராக்கியமாகிய தூண்டுகோலால் தூண்டிக்கொண்டே இருக்கவேண்டும். இந்தவிளக்கின் வெளிச்சத்தில் உன் வாழ்நாளின் லட்சியம் இன்னதென்று ஐயந்திரிபறவிளங்கும். அந்த லட்சியத்தையடைவதற்கு அநுகுணமானதெல்லாம் நன்மைபயக்கும்; அல்லவை தீமைவிளைவிக்கும். முந்தினதைத் தழுவியும் பிந்தினதைத் தள்ளியும்தினம் ஒழுகக்கடவாய்.

உனக்கேற்பட்டிருக்கும் கடமைகளைச் செய்வதில் கர்வம் கொள்ளாதே. டம்பமும்பாராட்டாதே. "அவனன்றிஓரணுவுமசையாது" "எல்லாம் ஈசன்செயல்" என்னும்வாக்கியங்களின் அர்த்தம் தெரியாது மனிதப்பிரயத்தனம் சற்றும் அவசியமேயில்லையென்றும் வருகிறதுவரட்டும்என்றும் சோம்பேறியாயிராதே. அது துக்கத்தை எதிர்கொண்டழைப்பதாகும். துன்பத்துக்கு இடம் கொடாதே. தீமையை ஜயிக்கமுடியாவிட்டால் உயிர்போனாலும் போகட்டும் என்று கடைசிவரையில் அதனுடன் போராடு. ஜயித்தால் தீரனாகிறாய்; ஜயம்கிடைக்காமல் நீபிராணனை இழக்கவேண்டிநேர்ந்தால் அதில் ஒன்றும் நஷ்டமில்லை. உன்புலால் உடம்புபோய் என்றும் அழியாத புகழுடம்பு பெறுவாய். யுத்தத்தில்பின்வாங்கிமுதுகுகாட்டி ஓடினவனைமாத்திரம் உலகம்நிந்திக்கும். ஜயம் அடைந்தவனுக்கும் ஸத்விஷயத்துக்காகத்தன் உயிரையிழந்தவனுக்கும் வித்தியாசமில்லை.

நினது சரீரம் ஈஸ்வராலயம். அதை எப்போதும் பரிசுத்தமாய் வைத்துக்கொள். உனக்குக்கொடுக்கப் பட்டிருக்கும் மனைவி, மக்கள், வீடு, நிலம், செல்வம் எல்லாம் ஈஸ்வரனுடையதே. அவைகளை நீநினைத்தபடியெல்லாம் செய்யஉனக்கு அதிகாரமில்லை. ஒரு யஜமானனுடைய பொக்கிஷத்துக்கு அதிகாரியானவன் தன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட பொக்கிஷத்தை எப்படித் தன் ஸௌகர்யத்தைக்கவனியாமல் யஜமானனுடைய ஸௌகர்யத்துக்கே செலவுசெய்வானோ அப்படியே கடவுளால் ஒப்புவிக்கப்பட்ட ஐஸ்வரியத்துக்கு நீ ஒருபொக்கிஷதாரனேயொழிய சொந்தக் காரனன்று என்பதை ஒருபொழுதும் மறக்காதே. பிறருடைய ஸௌகர்யத்



துக்கு அவற்றை உபயோகப்படுத்தினால் அவைஉனக்குலாபம்பயக்கும். அன்றேல் அவை உனக்குத் தீமையே விளைவிக்கும். மேற்சொன்னதின் உண்மையை எவன் நம்பவில்லையோ அவன் நாஸ்திகனே.

உலகவாழ்க்கை நரகஹேது என்று நினையாதே. பிறருடைய துக்கத்தையும் துன்பத்தையும் தீர்க்குமானால் உன்னுடையசெல்வம் உன்னைநற்கதிசேர்ப்பிக்கும். உன்னுடையகாமக்ரோதாதிகளுக்கு உபயோகப்பட்டால் அவை உன்னைப்பாழ்நரகத்துக்கே இட்டுச்செல்லும். எல்லாத்துன்பங்களுக்கும்வேர் எதுவென்றால் "நான்" 'எனது' என்னும் அகங்கார மமகாரந்தான். இதை அடியோடுவேரறுத்து நீஎந்தக் காரியம்செய்தாலும் அதுகடவுளுக்கு அங்கீகாரமாயிருக்கும்.

ஒவ்வொருவனும் உலகத்தின்பொது நன்மைக்காக தன்னயத்தை ஒழித்து உழைப்பானானால் இவ்வுலகமே ஸத்தியலோகமாகிவிடும். காலதேசவர்த்தமானம் ஜாதிமதபேதங்கள் இவைபொருட்டாகமாட்டா. உன்லாபத்தைவிட உன்குடும்பத்தின் ஸுகம் பெரிது. உன்குடும்பத்தைவிட உன்தேசம்பெரிது. உன்தேசத்தைவிட இந்தமாநட உலகம் மிகப்பெரியது. உலகத்தைவிட பிரபஞ்சம் பெரியது. பிரபஞ்சத்தைத்தாண்டினால் கடவுளை எதிரெதிராய்ப்பார்ப்பாய். நீசெய்கிற ஒவ்வொருகாரியமும் பேசுகிறபேச்சும் எண்ணுகிற எண்ணமும் பிரபஞ்சத்திலிருக்கும் தீமையைக் கடுகளவாவது குறைத்து நன்மையை அணுவளவாவது அதிகரிப்பதாயிருக்கட்டும். மேற்சொன்னபடி நடப்பாயானால் நீ சக்ரவர்த்தியானாலும்சரி அல்லதுகையெழுத்துப்போடவும் தெரியாதவிறகுவெட்டியானாலும் சரி, உன்யோக்கியதை ஸமமாயிருக்கும். பிரபஞ்சமானது நீ அதில்பிரவேசித்தபோதிருந்ததைவிட நீ அதைவிட்டுப்போனபிறகு நீ அதில் கொஞ்சநாள் வசித்ததற்காக சற்றேனும் மேன்மையடைந்திருக்கும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

கடவுளிடத்தில் இருக்கும்பக்தியை உலகத்திலுள்ளசர்வஜனங்களிடத்திலும் உனக்குள்ள அன்பால்வெளிப்படுத்து. கடவுளை வணங்குவதற்காக அவரால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் மனிதனை கவுரவப்படுத்துவதில் அவரிடத்தில் உனக்குள்ள அன்பைக்

காட்டு. பிரபஞ்சத்தைவிட்டுக் கடவுளை வேறாகக்காணலாம் என்று பிரயத்தனப்படுவது ஈஸ்வரஸம்மதமானதன்று. நாளடைவில் தன்னுடையஸ்வரூபம் மனிதனிடத்தில் மேன்மேலும் பிரகாசிக்க வேண்டுமென்ற கடவுளுடைய நோக்கத்தை மனதில்வைத்து அதற்கநுகுணமாய் நடந்துகொள். மனோவாக்குக் காயங்களால் அந்த லட்சியத்தை அடைய நீவழிதேடுவதுடன் உன் ஸஹோதரர்களையும் அப்படியேசெய்யும்படி தூண்டி உன்கோஷ்டியில்சேர்த்துக்கொள். தீமைஎன்பது அழியாதவஸ்துவல்ல; ஆனால் அதோடுபோராடுவதற்கு பிரபஞ்சத்திலுள்ள மனிதர் எல்லோரும் ஒருங்குசேர்ந்துபோராடவேண்டும். நமக்குக்கடவுள் பகுத்தறிவு கொடுத்திருப்பது இந்தநோக்கத்தை உத்தேசித்தேதான். ஒருவன்படும்வேதனையைத்தீர்ப்பதும், அழும்கண்ணீரைத் துடைப்பதுமே உன்ஜன்மஸாபல்யம் என்றுகருது.

இந்தவிஷயத்தில் இவன்நமதுஸமீபந்து இவன் அந்நியன்என்றுவித்தியாசம்பாராட்டாதே. எந்தஇடத்தில் மனிதர் ஒருவரை ஒருவர் ஸ்வயலாபத்துக்காக உபத்திரவம்பண்ணுவதும், ஒருவரையொருவர் அடிமைப்படுத்துவதும் தான் ஸரியானமார்க்கம் என்று கருதிநடக்கிறார்களோ அங்கேதான் துன்பத்தின் அதிஷ்டானதேவதைவஸிப்பதாகநினை. அதைஜயித்தாலல்லது நற்கதி இல்லை. உன்னால் அடிமைப்படுத்தப்படுபவர் உன்மனைவியாயினும் சரியே அந்நியனாயினும்சரியே, வேறுஜாதிமதஸ்தனாயினும் சரியே உன்னிடம் சம்பளம்வாங்கிஜீவனம் செய்யும்சேவகனாயினும்சரியே அதில்ஒன்றும் வித்தியாசமில்லை.

பாபத்தைவெறு. பாபகாரியங்களைச்செய்பவனைவெறுக்காதே அவனிடத்திலுள்ள சற்குணங்கள் ஒரு கூடைசாம்பலின்கீழ் அகப்பட்டுக்கொண்ட ஒருசிறுதீப்பொறிபோல் அகங்காரமமகாரத்தில் அகப்பட்டுக்கொண்டு பிரகாசிக்கச் சக்தியில்லாமல் ஸ்வரூபத்தை இழந்ததுபோலிருக்கின்றன. நற்குணங்கள் உன்னிடத்தில் எப்படி இப்போதுவிளங்குகின்றனவோ அப்படியே அவனிடத்திலுள்ள அற்பப்பொறிபோன்ற நற்குணமும் நாளைக்குப்பெருகி விளங்கத்தக்கதே. ஆதலால் நாளைக்கு உன்னுடையநிலைமைக்கு வருபவனாகக்கருதி உன் அயலானைநேசி. நீ எந்தஸமாஜத்தில் இருக்கிறாயோ அதைரக்ஷிக்கப்பாடுபடு. பிறருக்கு உபதேசம் பண்ணுவதை நிறுத்து. ஜனஸமூகத்தின்லாபத்தைவிட ஒருமனிதனுடைய லாபம்பெரிதென்று நினையாதே. தர்மம் என்பதுபொதுஜனலாபத்துக்கேற்பட்டது. ஆதலால்தர்மத்துக்கே உழை. உனக்கு உரிமைகள் ஒன்றுமில்லை. உனக்கு ஏற்பட்டகடமைகளை மனப்பூர்த்தியாய்ச்செய்துவிட்டு அதன்லாபநஷ்டத்தை ஈஸ்வரார்ப்பணம் செய்துவிடுவதே உன்னுடைய வேலையாயிருக்கவேண்டும். இதைச்செய்துவிட்டேன், அதைமுடித்துவிட்டேன் என்று கர்வம் அடையாதே. பொம்மலாட்டத்தில் ஆடுகிறபொம்மை "நான்நன்றாய் ஆடிவிட்டேன்" என்றுகர்வமடையுமோ? பொதுஜன அபிப்பிராயம் ஈஸ்வரஸம்மதமில்லாததாயிருந்தால் அதை நீ சட்டைசெய்யாதே.



வேதசாஸ்திரஆகமங்களை உனக்கு விளக்குகிறேன் என்றுவரும் ஒவ்வொருவனையும் குருவென்று அங்கீகரிக்காதே. கடவுளுடையஜோதிஸ்ஸும் அருளும் உனக்குவிளங்காமற்போகும்படி அவர்கள்மறைத்துவிடுவார்கள். ஸூர்யசந்திரநக்ஷத்ராதிகளும் பஞ்சபூதங்களும் பாபி பரமஹம்ஸன் எல்லோரிடத்திலும் ஒரேசீராயிருக்கிறார்களே. அதிலிருந்து நமக்குவிளங்குவதென்ன? கடவுளுடையகருணைக்கு பாபி, புண்ணியாத்மா இருவரும் பாத்தியப்பட்டவர்கள். எப்படிநமக்கும் ஸூரியனுக்கும்மத்தியில்மேகங்கள் வந்து ஸூர்யகாந்தியை மறைக்கிறதோ அதேமாதிரி துன்மார்க்கங்களும், அகம்பாவமும் நமக்கும் ஈசுவரனுக்கும்மத்தியில் ஏற்பட்டு ஈசுவரஸ்வரூபத்தை நாம்அறியவொட்டாமல் தடுக்கிறது. உலகத்தில் இதுவரையில் அவதரித்து அதற்கு ஒருபூஷணமாயிருந்துவிட்டு தங்கள்ஸ்தூலசரீரத்தை விட்டு நமது கண்ணுக்குமறைவாயிருந்து கொண்டு நாளைக்கும் உலகத்தில் நன்மைக்கேஉழைத்துவரும் மகான்களுடைய குணாதிசயங்களையும், அன்பையும் பிறர்பொருட்டுதங்கள் ஜீவன்களையும் கொடுக்கும் உதாரத்தையும் நமக்குகைகாட்டிமரங்களாக நாம்கருதவேண்டும்.

ஸந்தேகம்வந்தவுடனே ஸமீபத்திலிருக்கும் எவனிடத்திலும் ஓடி உன்ஸந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ளமுயலாதே. உன் பஞ்சேந்திரியங்களின் சேஷ்டையைச்சற்று நிறுத்திமனதை உன் ஆத்மஸ்வரூபத்தினிடத்தில் செலுத்திசற்றுநேரமாயினும்தினம் தியானத்தில் உன்மனதை நிலை நிறுத்து. உனக்கு விளங்காதவிஷயங்கள் நாளடைவில் விளங்குவதை நீயறிவாய். எவனிடத்தில் தீவிரபுத்தியும் நன்னெறியும் பொருந்தியிருக்கிறதோ அவனேபகவத்ஸாக்ஷாத்காரம்பெற்று உலகத்துக்குவழிகாட்ட ஏற்பட்டவன்.

உன்னிடத்திலும் ஈஸ்வராம்சம் நிலைபெற்று ஒரு பொழுதும் அகலாதிருக்கிறதென்பதையும்மறக்காதே. உனக்குஸத்தியம்,நியாயம் என்றுஉள்ளங்கைநெல்லிக் கனிபோல்துலங்குகிற காரியத்தில் அயலானுடைய அபிப்பிராயத்தைச் சட்டைசெய்யாதே. பூரண அன்பு,கவுரவம்,பரோபகாரம் இவைகுடிகொண்டிருக்கட்டும். அயலான் சொல்வதையெல்லாம்கேட்டு அவனை திருப்திசெய்யப்பிரயத்தனப்படாதே. கடவுளுடைய பிரதிபிம்பமாகிய உன் ஆத்மா எதை உனக்குக்கற்பிக்கிறதோ அதையேசெய். கடவுளிடத்தில் பூரணவிஸ்வாஸம் இருந்தாலொழியஐஹிக ஆமுஷ்மிகஸாதகங்கள் எதுவும் உனக்குஸித்திக்காது. கர்மம்பெரிது; யோகம்பெரிது, ஞானம்பெரிது, பக்திதான் எல்லாவற்றிலும்பெரிது, பஞ்சேந்திரியங்களின் அனுபவம்பெரிது அல்லது புத்தியே பெரிதுமுதலான வீண்தர்க்கங்களில் தலையிட்டுக்கொள்ளாதே. இவை ஒவ்வொன்றும் அவசியம் தான். ஆனால் அவைகள் எல்லாம் துணைக் கருவிகள். அவைகள் எல்லாம் நற்கதிக்குநம்மை நடத்தும். நமது வாழ் நாளின் லட்சியம் மாத்திரம் ஸதாஸர்வதாகாலமும் நமக்கெதிரில் நிற்கவேண்டும். நேற்றைவிட இன்றைக்கும் இன்றைவிட நாளைக்கும் அந்தலட்சியத்தை நாம் ஸமீபித்து அணுகவேண்டும்.

நிஷ்காம்யகர்மம் ஜனஸமூகத்தின் ஒத்த வாழ்க்கைக்கு அஸ்திவாரமாயிருக்கட்டும். கூலியும் வேலைக்குத்தகுந்தபடி யிருக்கட்டும். வேலைசெய்யாதவனுக்குக் கூலியில்லை.

நாலுபேரை ஒருபொது நன்மையைக்கருதி, ஸ்வப்ரயோஜனத்தைக்கருதாது, ஓரிடத்தில் சேரும்படிசெய்யும் எந்தக்காரியமும் கடவுளுடைய வேலை யென்றே நினை. அதிலிருந்து வேற்றுமைப்படுகிறவர்களை அவர்களுடைய அபிப்பிராயங்களுக்காக நிந்திக்காதே. அவர்களை ஜனங்கள் அவமதித்து உபத்திரவம் செய்யாமல் காப்பாய்.

தெய்வபக்தியோடு கலந்தகல்வியை ஜனங்களுக்குக்கற்பிக்க நீ கடமைப்பட்டவன். அந்தக்கல்வியின் அறிகுறி என்னவென்றால் அது மனிதனை நேற்றிருந்ததைவிட இன்றுநல்லநிலைமைக்குக்கொண்டுவந்திருக்கவேண்டும். அந்தக்கல்வியின் முடிவு எப்படியிருக்கவேண்டும்? மனிதர்களிடத்தில் நீதி நிலைத்திருக்கவேண்டும்.

மேற்சொல்லிவந்த விஷயங்களை நீ ஒப்புக்கொள்ளாமல் வெறுக்கலாம். ஆனால் நீங்கள் வெளிவேஷம்போட்டுக்கொண்டு வெகு



வினயத்தோடு செய்யும் வைதீக கர்மங்களைவிட மேற்சொன்னவைகளே மேம்பட்டவையென்று ஸர்வஜன ஸம்மதம் ஏற்படும் காலம் சமீபத்திலிருப்பதாய் எனக்குத்தோற்றுகிறது.



## சின்னச்சங்கரன் கதை.



சாவித்திரி என்னும் நமது நேயர் எழுதியது.

### மூன்றும் அத்தியாயம்.

### ராமசாமிக்கவுண்டர் திருச்சபை.

(65-வது பக்கத்திலிருந்துதொடர்ச்சி.)

ஸாயங்காலத்துக் கச்சேரி முடிந்தவுடன் கவுண்டரவர்கள் குதிரைவண்டியிலேறி ஊரைச்சுற்றி ஸவாரிசெய்துகொண்டு வருவார். கவுண்டநகரம், சரித்திரப்பெருமையும், "க்ஷேத்திர மஹாத்மியமும்" வாய்ந்த ஊராயினும், அளவில்மிகவும்சிறியது. ஐந்து நிமிஷத்துக்குள் குதிரை வண்டி இதைச்சுற்றி வந்துவிடும். இதற்குப் பன்னிரண்டிடத்தில்"வாங்கா"ஊதுவார்கள். இந்த"வாங்கா" என்பது பித்தளையில் ஒருவித ஊது வாத்தியம். பறையர் இதனை ஊதிக்கொண்டு ஜமீந்தாரவர்களின் வண்டிமுன்னே குடல் தெறிக்க ஓடுவார்கள். சிலதினங்களில் பல்லக்கு ஸவாரி நடக்கும். இன்னும் சில சமயங்களில் ஜமீந்தாரவர்கள் ஆட்டு வண்டியிலேபோவதுண்டு. "ஆட்டுவண்டி" ஸவாரிக்கு உதவுமா என்று படிப்பவர்களிலே சிலர் வியப்படையக்கூடும். இரண்டு ஆடுகளை வழக்கப்படுத்தி, அவற்றுக்கிணங்க ஒரு சிறு வண்டியிலே பூட்டி, வண்டி, ஆடுகள் இவற்றைச்சேர்த்து நிறுத்தால், அவற்றைக் காட்டிலும் குறைந்த பக்ஷம் நாலுமடங்கு அதிகநிறைகொண்டஜமீந்தார் ஏறிக்கொண்டு தாமே பயமில்லாமல் ஓட்டுவார். குதிரைகள் துஷ்டஜந்துக்கள். ஒரு சமயமில்லாவிட்டால் ஒரு சமயம் கடிவாளத்தை மீறி ஓடி எங்கேனும் வீழ்த்தித்தள்ளி விடும். ஆடுகளின் விஷயத்தில் அந்த ஸந்தேகமில்லை யல்லவா? இன்னும் சில சமயங்களில் ஜமீந்தார் ஏறு குதிரை ஸவாரி செய்வார். இவருக்கென்று தனியாக ஒரு சின்னக்குதிரை மட்டம்—ஆட்டைக்காட்டிலும் கொஞ்சம் பெரிது—தயார் செய்து கொண்டு வருவார்கள். அதன் மேல் இவர் ஏறி உட்கார்ந்தவுடனே, அதற்கு முக்கால்வாசி மூச்சு

நின்றுபோம். பிரக்கினை கொஞ்சந்தான் மிஞ்சியிருக்கும். எனினும் இவருக்கு பயந்தெளியாது. இவருடைய பயத்தை உத்தேசித்தும், குதிரையை எப்படியாவது நகர்த்திக்கொண்டு போகவேண்டு மென்பதை உத்தேசித்தும் முன்னும், பின்னும், பக்கங்களிலுமாக ஏழெட்டு மறவர் நின்று அதைத்தள்ளிக்கொண்டு போவார்கள். ஜமீந்தார் கடிவாளத்தை ஒரு கையிலும், பிராணனை மற்றொரு கையிலும் பிடித்துக்கொண்டு பவனிவருவார்; வாங்கா சத்துக்குக் குறைவிராது. இந்த வியவஹாரம் ஒரு நாள் நடந்தால், பிறகு மூன்று நான்கு வருஷங்களுக்கு இதை நினைக்கமாட்டார்; அதற்கப்பால் மனுஷன், எப்படியும், க்ஷத்திரியனல்லவா? பயந் தெளிந்து பின்னொருமுறை நடக்கும். இவர் இப்படிக் கோழையாக இருப்பதைக்கருதி யாரும் நகைக்கலாகாது. அர்ஜுனனும், வீமனும், அபிமன்யுவும் தோன்றிய சந்திரவம்சத்தில் நேரேபிறந்ததாக இதிஹாசங்களிலே கோஷிக்கப்படுகின்ற கவுண்டனூர் ராஜகுலத்தில் இவர் சேர்ந்திருந்தும், இவ்வாறு கொஞ்சம் அதைரியப்படுவதற்குச் சில ஆழ்ந்த காரணங்களுண்டு. இவருக்குப்புத்திரபாக்கியம் இல்லை. அதற்காகப் பலவித ஹோமங்கள், பூஜைகள் கிரகசாந்திகள், தீர்த்தயாத்திரைகள், யந்திரஸ்தாபனங்கள் முதலியன செய்துகொண்டு வருகிறார். இந்த அவஸரத்திலே குதிரையிலிருந்து தவறி விழுந்து உயிர் போய்விடுமானால் பிறகு இவருடைய சக்ராதிபத்யத்துக்கு ஒரு மகன் பிறக்க இடமேயில்லாமல் போய்விடுமல்லவா? எத்தனைபேர் குதிரையிலிருந்து விழுந்து செத்திருக்கிறார்கள். அதையும் கவனிக்க வேண்டாமா? சிலமாதங்களுக்கு முன்பு கூட ருஷியா தேசத்தில் ஒரு குதிரைப்பந்தயத்திலே ஒருவன் வேலிதாண்டி விழுந்து உயிர் போய்விட்டதாக சுதேசமித்திரன் பத்திரிகையில் எழுதியிருந்த விஷயத்தை இவரிடம் யாரோவந்து சொல்லவில்லையா? நாலு காரியத்தையும் யோசனை செய்து தானே நடக்கவேண்டும். ஒருதரம்போனவுயிர் திரும்பி வருமா? ஸாயங்காலத்து ஸவாரி முடிந்தவுடனே கவுண்டரவர்கள் அரமனைக்குள் வருவார். நாலைந்து பேராக இருந்து இவருடைய ஐரோப்பிய உடுப்புக்களைக் கழற்றி யெறிந்துவிட்டு வேஷ்டி உடுத்துவார்கள். உத்தரீயத்தைத் தாமாகவே வாங்கி மேலே போட்டுக் கொள்வார். மனுஷன் வேலைக்குமாத்திரம் பின்வாங்க மாட்டார். அது ஒரு குணம் இவரிடத்தில். பிறகு கைகால் சுத்தி செய்துகொண்டு லேஹ்யம் சாப்பிட்டபிறகு சாய்நாற்காலிக்கு



வந்து விடுவார். அப்பால், வெற்றிலை, புகையிலை, ஊர்வம்பு, கதை முதலியன.

இரவு சுமார் பத்துமணியாகும்போது, ஜமீந்தாருக்கு ஒருவாறு புகையிலைச்சாறும் லேஹ்ய வெறியுமாகச்சேர்ந்து தலையை மயக்கி சாய்ந்தபடி, கதை கேட்கக் கூடமுடியாதவாறு, செய்துவிடும். வம்பு பேசும் 'கார்யஸ்தர்களுக்கும்', நின்றுநின்று காலோய்ந்து போய்விடும். எனவே கவுண்டர் எழுந்து கைகால் சுத்தி செய்வித்துக்கொண்டு, ஸந்தியாவந்தனம் செய்து முடித்து, லேஹ்பம் தின்றுவிட்டு, அந்தப்புரத்திலே போய் சாஸ்திரப்படி முப்பத்திரண்டு கவளம் சாப்பிட்டு உடனே நித்திரைக்குப் போய்விடுவார். ஜமீந்தாரவர்களுக்கு ஐந்து மனைவிகளுண்டு. ஆனால் ஜமீந்தாரவர்களோ அர்ஜுனனுக்கு நிகரானவர்—விராடநகரத்திலிருந்த அர்ஜுனனுக்கு—. அதாவது, மஹாராஜ ராஜபூஜித மஹாராஜ ராஜஸ்ரீ மஹாராஜ மார்த்தாண்ட சண்டப்ரசண்ட அண்டபகிரண்ட கவுண்டாதி கவுண்ட கவுண்டநகராதிப ராமசாமிக்கவுண்டரவர்கள் பரிபூர்ண நபும்ஸகனென்று தாத்பர்யம். இவருடைய தினசரிக்காரியம் ஒருவாறு சொல்லிமுடித்தோம். இன்னும் எவ்வளவோ சொல்லவேண்டியிருக்கிறது. சந்தர்ப்பம் வாய்க்கு மிடத்து அப்போதப்போது சொல்லுகிறோம். இவ்வத்தியாயத்தின் மகுடத்திலே குறிப்பிட்டபடி இவருடைய சபையைப்பற்றி மாத்திரம் கொஞ்சம் விரித்துச் சொல்லப்போகிறோம், நம்முடைய கதாநாயகனாகிய சங்கரன் இந்த சபையைச் சேரவேண்டியவனாக இருக்கிறபடியால். ராமசாமிக் கவுண்டர் தமிழிலும், ஸங்கீதத்திலும், வித்வானென்று முன்னமேயே சொல்லி யிருக்கிறோம். அவருடைய சபையிலுள்ள பண்டிதர்களுடைய பெயர், இயல், சிறப்பு, முதலியவற்றைச் சிறிது விஸ்தரிக்கின்றோம். வித்வான் அண்ணாத்துரை அய்யர், தர்க்காலங்கார ஸர்வசாஸ்த்ரஸாகர உபய வேதாந்த ப்ரவர்த்தன நிவர்த்தன ஸம்வர்த்தனாசார்ய பெருங்குன்றம் கிடாம்பி யாச்சான் ஆம்ரோதனாசார்யர், முத்தமிழ்ச்சிங்கக்குட்டி. முத்துக்கருப்பண பாவலர், தோடி நாராயணய்யங்கார், முடுக்கு பல்லவி வேதாசலக்குருக்கள், கம்பராமாயணப்பிரசங்கம் ஆறுமுகக்கவுண்டர், வேலக்கவுண்டர், மூங்கிலறுப்பு ராமசந்திரபாகவதர், அறுபத்துநாலக்ஷரப் பிச்சாண்டிபாகவதர், பரமததூஷணஸ்வமதபூஷண, ஸர்வமத பாஷாண பூர்ண பஸ்ம சிவனவர்கள், தொ

ல்காப்பியம் இருளப்ப பிள்ளை, காமரஸமஞ்சரி சுந்தரய்யர், இவர்களே முக்கிய வித்வான்கள். இனி சில்லரை வித்வான்கள் பலருமுண்டு.

மேலே சொல்லப்பட்ட வித்வான்களெல்லோரும் புடை சூழ்ந்திருக்க, வானத்துப் புலவர்களுக்கு நடுவே இந்திரன்போலவும் (வானத்து) மீன்களுக்கு நடுவே ஆமை (சந்திரன்) போலவும், இன்னும் எதை யெல்லாமோ போலவும், கவுண்டர் கொலு வீற்றிருந்தார்.

அப்போது அடைப்பை தூக்கும் தொழி லுடையவனும் ஆனால் முத்தமிழ்ப் புலவர்க்குள்ளே, மிகச் சிறந்த வகுப்பில் வைத்து எண்ணத் தக்கவனுமாகிய முத்திருளக்கவுண்டன்வந்து, பின்வருமாறு விண்ணப்பஞ் செய்து கொள்ளலானான்.

“புத்தி” என்றான் முத்திருளன்.

(ஜமீந்தாரவர்களிடம் வேலையாட்கள் பேசும்போது “புத்தி” என்று தொடங்குவது வழக்கம். இந்தச் சொல்லை இந்த இடத்தில் இந்த அர்த்தத்தில் வழங்குவதற்குள்ள விசேஷ காரணத்தைக் கண்டுபிடித்துச் சொல்லும்படி தமிழ் நாட்டில் மலிந்து கிடக்கும் பாஷா பரிசோதனைப் பண்டிதர்களிடம் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறேன். நான் யோசனை செய்து பார்த்ததில் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. சிற்சில காரணங்கள் தோன்றுகின்றன. ஆனால் ஒருவேளை சரியாக இருக்குமோ இராதோ என்ற அச்சத்தால் இங்கு வெளியிட மனம் வரவில்லை.)

“புத்தி” என்றான் முத்திருள்.

என்ன, முத்திருளா, உன் முகத்தைப் பார்த்தால் ஏதோ நல்ல ஸமாச்சாரம் கொண்டு வந்திருக்கிறதுபோல்தோன்றுகிறது. என்ன, நான் நினைத்தது சரியா, தப்பிதமா? என்று ஜமீந்தார் கேட்டார்.

ஐயோ! அவ்விடத்து ஊஹத்திலே ஒரு வார்த்தைசொல்ரது, அது தப்பியும் போகிறதா? இது எங்கேயாவது நடக்கிற சங்கதியா? மனுஷ்யாளுடைய நெஞ்சுக்குள்ளிருக்கிற மர்மத்துக்குள்ளிருக்கிற ரஹஸ்யத்துக் குள்ளிருக்கிற ரஹஸ்யமெல்லாம், மஹாராஜாவுடைய புத்திக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோலவும், கண்



ணிலே விழுந்திருக்கும் பூவைப் போலவும், நன்றாகத் தெரிந்து போகுமே! அடியேன் மனஸிலிருக்கிறது தெரியாதா? என்றான் முத்திருளன்.

கொஞ்சம் தெளிவு குறைந்ததும், தர்க்க சாஸ்திர விதிகளுக்கு இசையாததுமான இந்த ஸ்துதியைக்கேட்டுக்கவுண்டரவர்கள்மிகவும் ஸந்தோஷ மடைந்து, முப்பத்திரண்டு பற்களில் விழுந்தது போக மற்றுள்ள காவிபூத்த பற்களெல்லாம், பெரியவும் சிறியவுமாகிய மாதுளங்கனி விதைகளைப் போலவும், வேறுபல உவமைப் பொருள்களைப் போலவும், வெளியே தோன்றும்படி பலமான மந்தஹாஸம் புரிந்தார். முத்திருளன் மீது பொதுவாக எப்போதுமே ஜமீந்தாரவர்களுக்கு அன்பதிகம். அவன் நெடுநாளைய வேலைக்காரன்; பல தந்திரங்கள் தெரிந்தவன். தவிரவும் பாலியத்தில் ஜமீந்தாரவர்கள் கொஞ்சம் சில்லரை விளையாட்டுக்கள் விளையாடிய போது உடந்தையாக இருந்து பலவித உதவிகள் செய்தவன். இன்னும், இன்னும் எத்தனையோ காரணங்களுண்டு. ஆனால்பிரபுக்களின் தயவாகிய நதியின் மூலத்தை விசாரிக்கலாகாது.

முத்திருளா, மற்றவர்களுடைய கவியும் சரி, உன்னுடைய வார்த்தையும் சரி, அவர்களுடைய கவி கேட்பதிலுள்ள சுகம் உன் பேச்சிலேயிருக்கிறது, என்று ஜமீந்தார் தனது வேலைக்காரனை மெச்சினார், அவன் தம்மைப் புகழ்ந்து பேசியதற்கு வெகுமதியாக. சபையிலிருந்த புலவர்களுக்கெல்லாம் அடிவயிற்றிலே எரிச்ச லுண்டாயிற்று. இது முத்திருளக் கவுண்டனுக்குத் தெரியும். ஜமீந்தாருக்குக் கூட ஒருவேளை தெரிந்திருக்கலாம். அப்படியிருந்தும் அவர்களெல்லோரும் தமது எரிச்சலை உள்ளே அடக்கிக் கொண்டு வெளிப்படையாக ஜமீந்தாருடையகருத்தை ஆமோதித்துப் பேசினார்கள். உபய வேதாந்த ஆ...சாரியர், ஆமாம்,மஹாராஜா! ஸம்ஸ்க்ருதத்திலே பாணகவியைப் போல நம்முடைய முத்திருளக் கவுண்டன். அவர் தமது காதம்பரியை வசனநடையிலே தான் எழுதியிருக்கிறார். அப்படியிருந்தும், பாட்டாகச் செய்யப்பட்டிருக்கும் எத்தனையோ காவியங்களைக் காட்டிலும் அதைப் பெரியோர்கள் மேலானதாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் பாணகவி உட்கார்ந்து புஸ்தகமாக எழுதினார். நமது முத்திருளக் கவுண்டன் சிரமமில்லாமலே பேசுகிற பாவனையில் அத்தனை பெரி

யதிறமை காட்டுகிறான். இவனை வசன நடையில் ஆசுகவி என்று சொல்லலாம் என்று திருவாய் மொழிந்தருளினார்.

உடனே, முத்திருளன் அவரை விரஸத்துடன் நோக்கி, "செய்யுளும் நமக்குப் பாடத்தெரியும், சாமீ! ஏதோ வாயினால் சும்மா உளறிக் கொண்டிருப்பான், பாட்டுப் பாடத்தெரியாதவன் என்று நினைத்து விடவேண்டாம" என்றான், தனக்குக் கவிபாடத் தெரியுமென்பதையும், அவருக்கு அத்தொழில் தெரியாதது பற்றித்தனக்கு அவரிடம் மிகவும் அவமதிப் புளதென்பதையும், அவருக்குக் குறிப்பிட்டுக் காட்டும் பொருட்டாக. ஆ...சாரியர்தமது உள்ளத்திலே எழுந்த கோபத்தை அச்சத்தினால் நன்றாக அடக்கி வைத்துக்கொண்டு, "பாணகவி செய்யுள் பாடுவதில் இளைத்தவனென்று நினைத்தாயோ? ஆஹா, முத்திருளக்கவுண்டா! நீ ஸம்ஸ்க்ருதம் படித்திருக்கவேண்டும். படித்திருந்தால் நீபாணகவிக்கு நிகரானவன் என்பது உனக்கே நன்றாகத் தெரிந்திருக்கும்" என்று திருவாய் மொழிந்தருளினார்.

[சதாரணமாக, ஆ...சாரியரைப் போன்ற மஹான்கள் பேசுவதை 'திருவாய் மலர்ந்தருளினார்' என்று சொல்வது வழக்கம். அப்படியிருக்க, நாம் 'திருவாய் மொழிந்தருளினார்' என்று புதிதாகச்சொல்வதற்கு இரண்டு காரணங்களுண்டு. அவருக்குத்தமிழ்ப் பாஷையில் அதிகப்பழக்கமில்லாத போதிலும், திருவாய் மொழிப் பிரபந்தம் முழுவதையும் பாராமல் குட்டியுருவாகச் சொல்லக் கூடியவரென்பதை, நாம் ஒருவாறு குறிப்பிட விரும்புதல் ஸாமான்யக் காரணம்; சரியான காரணம் இன்னும் சில வரிகளுக்கப்பால் தானே விளங்கும்.] பிறகு முத்திருளக் கவுண்டன் தனக்கு ஸம்ஸ்க்ருதம் தெரியாதென்பதை ஆ...சாரியர் கேலி பண்ணுகிறாரென்று நினைத்துத் தலையை நேரே தூக்கிக்கொண்டு, அவனது மீசை, கிருதாக்கள் துடிக்கப் பின்வருமாறு உபந்யாஸம் செய்யலானான்.

சாமி, அய்யங்காரவாளே, சாமிகளே, அப்படியா வந்து சேர்ந்தீர்கள். (சபையோர் நகைக்கிறார்கள்) இந்தக் கதையா? இதெல்லாம் முத்திருளனிடம் வைத்துக் கொள்ள வேண்டாம். சென்னப்பட்டணத்தில் சி. வை. தாமோதரம் பிள்ளை என்று ஒரு மஹாவித்வான் இருந்தாரே கேள்விப்பட்டதுண்டா? அவர் சூளாமணி என்னும் காவியத்தை அச்சிட்டபோது அதற்கெழுதிய முகவுரையை யாரைக் கொண்டேனும் படிக்கச் சொல்லியாவது கேட்டது



ண்டா? திருவனந்தபுரம் பெரிய கலா சாலையில் தமிழ்ப் பண்டிதராகி, அன்னிய பாஷைகள் ஆயிரங்கற்று, நிகரில் புலவர் சிகரமாக விளங்கிய சுந்தரம் பிள்ளையவர்கள் எழுதிய நூல்களில் ஏதேனுமொன்றை எப்போதாவது தலைக்கணையாக வைத்துப் படுத்திருந்ததுண்டா? அல்லது அவர் புஸ்தகங்கள் வைத்திருந்த அலமாரியை மோந்துபார்த்ததுண்டா? அப்படி மோந்து பார்த்தவர்களையேனும் மோந்து பார்த்த துண்டா? (இந்த அற்புதமான வாக்கியத்தைக் கேட்டு சபை கலீரென்று நகைக்கிறது. ஆ...சாரியர் பேசுவதற்காகத் திருவாய் மலர்ந்தருளினார். ஆனால் மலர்ந்த திருவாய் மொழிவதற் குள்ளாகவே முத்திருளன் அவரைப் பேச வொட்டாதபடி பின்வருமாறு கர்ஜனை புரியலானான்) சாமி, சாமிகளே, அய்யங்காரவாளே, பிறர் பேசும் போது நடுவிலே, குறுக்கேபாயக் கூடாதென்று உங்கள் ஸம்ஸ்க்ருத சாஸ்திரங்களிலே சொன்னது கிடையாதோ? அல்லது ஒரு வேளை சொல்லியிருந்தால் அதை நீங்கள் படித்தது கிடையாதோ? சாமிகளே, மேலே நான் சொல்லிய புலவர்களும், இன்னும் ஆயிரக்கணக்கான வித்வச் சிரோமணிகளும், பதினாயிரக்கணக்கான பண்டிதர்களும், நாற்பதினாயிரக்கணக்கான, லக்ஷக்கணக்கான, கோடிக்கணக்கான, பத்திராசிரியர்களும் வடமொழியைக் காட்டிலும் தமிழே உயர்ந்த பாஷையென்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கிப் பசுமரத்தாணி போல நாட்டியிருக்கிறார்கள். நீவிர் அதனை யுணாது குன்றுமுட்டிய குரீஇப் (குருவி) போல இடர்ப்படுகின்றீர்.

"தொண்டர் நாதனைத்தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்ததும்...ம்,...ம்,...ம்,
தண்டமிழ்ச் சொலோமறு புலச் சொற்களோ
சாற்றீர்?" என்ற பாட்டைக் கேட்டதுண்டா?

இந்தப் பாட்டிலே சில வார்த்தைகள் முத்திருளனுக்கு ஸமயத்தில் ஞாபகம் வரவில்லையாதலால் அவற்றை விழுங்கி விட்டு பிழைபாகப் பாட்டைச் சொல்லி முடித்தான். சபையில் பலருக்கு இந்தப்பாட்டு நன்றாக ஞாபக முண்டு. ஆயினும் அவனைத்திருத்தப் போனால் தங்கள் மீது பாய்ந்து விடுவானென்று பயந்து புலவோர்கள் வாய்மூடி மவுனமாக இருந்து விட்டார்கள். அவர்கள் திருத்தாமலிருக்கும் படியாகவே முத்திருளன் அவர்களைச் சுற்றி

நோக்கி மிகவும் பயங்கரமான தோர் பார்வைபார்த்து விட்டு மேலே கர்ஜனை செய்கிறான்.:—

இனி வடமொழியில் தான் வேதம் உளதென்று நீர் ஒரு வேளை சொல்லலாம். அஃது எங்கள் தேவார திருவாசங்களுக்கு நிகராகுமா ? இந்தப்பாடலுக்கு நான் இப்போது பொருள் சொல்லமாட்டேன். உமக்குத் தெரியாவிட்டால், வீட்டிலே போயிருந்து கொண்டு படிப்புத்தெரிந்த வாலிபப் பிள்ளை எவனை யேனும் அழைத்து அவனிடம் பொருள் கேட்டுக் கொள்ளும்.

(சபை கலீரென்று நகைக்கிறது ஆ...சார்யர் முடிசாய்ந்துவிட்டார்)"ஆங்காணும்,தமிழ்ப் பாஷைக்கு நேரானதோர் பாஷையில்லை. அதிலும், வட.மொழி நமது தமிழ் மொழிக்குச் சிறிதேனும் நிகராகமாட்டாது. தமிழ் கற்றோர் அனைத்துங் கற்றோர். அறியும். அறியும். அறியும். இனி வித்வான்களுடைய சபையிலே ஊத்தை வாய் திறக்கவேண்டாம்".

வாயிலே நுரைக்கும்படி முத்திருளன் இவ்வாக்கியம் சொல்லிமுடித்து, மேலே பேசமூச்சில்லாமல் கொஞ்சம் நின்றான். அப்போது ஆ...சார்யர் மிகவும்ஹீனஸ்வரத்திலே,முத்திருளா,என்ன இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாயே. நான் பாணகவிக்கு நிகரென்று உன்னை ஸ்தோத்திரமாகத் தானே சொன்னேன். விஷயத்தைக் கவனியாமலே வீண்கோபம் செய்கிறாயே, என்றுதிருவாய் மொழிந்தருளினார்.



## நமது பூமியே புண்ணிய பூமி. *



(பிரஹ்மஸ்ரீ ஆர். நாராயணசாமி அய்யரவர்கள் மொழி பெயர்த்தது.)

ஆஹா! எவ்வித பூமியிது! இந்தப் புண்ணியபூமியில் நிற்கும் எவனும், சுதேசியாயினும் சரியே, அந்நிய தேயத்தவனாயினும் சரியே,—தன்னுடைய ஜீவனை மிருகத்தன்மைக்குச்சமமாகத்தாழ்த்தி யிருந்தாலொழிய—தன்னைச்சுற்றிலும் உலகத்திலேயே அதிமேன்மையான பரிசுத்தகுணம் பொருந்திய முனிவர்களின் மனோபாவனைகள் சூழ்ந்திருப்பதை உணராமல் இருக்கமாட்டான்; அநாதிகாலம் முதற்கொண்டு இம்முனிவர்கள் மிருகங்கட்குச் சமமாக இருக்கும் மனிதர்களைத் தெய்வத் தன்மையடையும்படி செய்து கொண்டே வருகின்றனர். இங்கு வீசும் காற்றும் ஆத்மஞானவாசனைகள் நிரம்பப்பெற்றது. தத்துவம், சன்மார்க்கம், ஆத்மஞானம் முதலியனவைகள் நிறைந்துள்ள பரிசுத்த க்ஷேத்திரம் இந்தப் பூமியே; மனிதனானவன் மிருகத்தன்மையைப் பாதுகாப்பதற்காகப் படுகிற கஷ்டங்களினின்றும் அவனை விடுவிக்கவல்ல சக்திகளும். இந்த மிருகத்தன்மையான போர்வையை உதறியெறிந்துவிட்டு ஜனனமற்று மரணமற்று நித்தியாநந்த சொரூபமாயுள்ள ஆத்மாவாகவே தான் நிற்கும்படி செய்வதற்கு அநுகூணமான பயிற்சிகளும் நமது பூமியிற்றான் நிறைந்திருக்கின்றன. சுகங்களை பூர்த்தியாக நிறைந்திருந்தாலும் இதைக்காட்டிலும் அதிகமாகவே துக்கங்களும் நிறைந்திருந்தபடியால், மனிதனானவன் சகலமும் மாயை என்று முதன் முதலில் கண்டுபிடித்தது இப்பூமியிற்றான். யௌவன தசையிலேயே, டாம்பீகத்தின் மடியிலேயே, பெருமையின் உன்னதத்திலேயே, பூர்த்தியான அதிகாரத்திலேயே, மனிதனானவன் பொய்க்காட்சியின் விலங்குகளை முதன் முதலில் பொடித்து ஊதியது இந்தப் பூமியிலேதான். மனிதவர்க்கமென்னும் இந்த சாகரத்தில், இவ்விடத்திலேதான், ஒன்றோடொன்று ஊடுருவி யோடிக் கொண்டிருக்கின்ற இன்பம்—துன்பம், பலம்—பலஹீனம், தனம்—தரித்திரம், சுகம்—துக்கம், புன்னகை—கண்ணீர், ஜீவிதம்—மரணம் என்று சொல்லப் பட்ட பலமான நதிப்பிரவாகங்களின் மத்தியில் நித்தியானந்த மென்றும் உபசாந்த மென்றும் உரைக்கப்பட்ட (சகலவற்றையும் சின்மாத்திரமாகக்) கரைக்கின்ற லயத்தினின்றும் சர்வசங்க பரித்தியாகமாகிற ஆசனம் கிளம்பிற்று! ஜீவிதம், மரணம், ஜீவிதஇச்சை இவைகளைப் பற்றியுள்ள பெருங்கேள்விகள் முதன் முதலில் இங்குதான், இப்பூமியிற்றான் வெகுதீவிரமாய்க் கேட்கப்பட்டு, விடை பெற்றன. இவ்விடைகள் இதுவரையில் ஒருபொழுதும் அளிக்கப் பெற்றிராதவிதமாயும் இனிமேலும் ஒருபொழுதும் அளிக்கப்பெறா என்று சொல்லக் கூடிய விதமாயும் இருக்கின்றன; ஏனென்றால் இங்கே, இப்பூமியிற்றான், வாழ்க்கையே துக்கம் என்றும் சத்தியமாயிருக்கும் ஏதோ ஒன்றின் சாயாமாத்திர மென்றும் கண்டு பிடிக்கப் பட்டது. இப்பூமியிற்றான் மதமானது அநுபவ உண்மையாக விளங்கியது; இதரநாடுகளில் அவர்கள் எங்ஙனம் எளிய சகோத

* இஃது ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகளால் ஆங்கில பாஷையில் எழுதப்பட்டது.

ர்களைக் கொள்ளை யடித்தாகிலும் வாழ்க்கைச் சுகங்களை அநுபவிப்பதற்குப் பித்துப் பிடித்தா முற்படுகிறார்களோ, அங்ஙனமே (ஜீவிதகால) லட்சியத்தை அநுபவத்தில் அடைவதற்கு புருஷர்களும் ஸ்திரீகளும் தைரியமாய் முற்பட்டது இப்பூமியிற்றான். இந்தப்பூமியிலே மாத்திரம்தான் மனிதனுடைய ஹிருதயமானது விரிவடைந்தது; இவ்விதம் விரிவடைந்த ஹிருதயத்திற்குள் மனிதவர்க்கம் மட்டுமன்று, பட்சிகள், மிருகங்கள், புல்பூண்டு வர்க்கங்கள் ஆகிய எல்லாம் அடங்கின; உயர்ந்த தேவதைகள் முதல் தாழ்ந்த மணற்பருக்கைகள் வரையில் மகா உயர்ந்தவைகளும் மிகத்தாழ்ந்தவைகளும் ஆகிய எல்லாம் எல்லையற்று விரிவடைந்த மனித ஹிருதயத்திற்குள் இடங்கண்டு கொண்டன இந்தப் பிரபஞ்சம் முழுவதும் இடைவெளியற்ற ஒரேவஸ்து வென்றும் அதன் ஒவ்வொரு நாடியும் தன்னுடைய நாடியே என்றும் மனிதன் அறிந்தது முதன் முதலில் இந்தப் பூமியிலேயே தான்.

## புத்தகவரவு.

ஆதங்க நிக்கிரஹ ஔஷதாலயத்தின் சகலவிவரங்களும் அடங்கிய ஓர் புத்தகம் வரப்பெற்றோம். ஆதங்கநிக்கிரஹ ஔஷதாலயத்தைப் பற்றி அறியாதார் மிகவும் சிலரே. இதன் ஸ்தாபகராகிய வைத்தியசாஸ்திரி மணிசங்கர் கோவிந்தஜீ அவர்கள் 1881 - வது வருஷத்தில் ஒருமிகவும் சிறிய அறையில் ஒரே எளிய சேவகனுடன் இம்முயற்சியை ஆரம்பித்தாரென்றும் இப்பொழுது இம்முயற்சி மேற்படி வைத்திய சாஸ்திரியினது விடாமுயற்சியினாலும் ஊக்கத்தினாலும் பலப்பட்டு நமது தேசத்தின் நாலாபக்கங்களிலும் கிளையாபீசுகளும் ஏற்பட் டிருக்கின்றன வென்றும் நாம் அறிகிறோம். ஆதங்கநிக்கிரஹ ஔஷதாலயத்தின் அற்புதமான விளம்பரங்களை எல்லாப்பத்திரிகைகளிலும் காணலாம். இந்திய தேசத்துச் சக்கரவர்த்தி, சக்கரவர்த்தினி, காத்தியாவார் தேசாதிபதியும் க்ரிக்கெட் என்னும் பந்துவிளையாட்டில் உலகமெங்கும் பிரக்கியாதி பெற்றவரும் ஆகிய மகாராஜாதிராஜ் ரஞ்ஜிதசிங்கம், ஔஷதாலயத்தின் ஆதிகர்த்தாவாகிய வைத்தியசாஸ்திரி மணிசங்கர் கோவிந்த்ஜீ, அவரது புத்திரர்கள், காரியஸ்தர்கள், தலைமையாபீஸ், கிளையாபீஸ்கள், இவ்வாலயத்தைச்



சேர்ந்த தர்மஸ்தாபனங்கள் இவைகளின்படங்கள் மேற்படி புத்தகத்தில் மிக அழகாகவும் பார்ப்பவர் மனதை வசீகரிக்கத் தக்கதாகவும் இருக்கின்றன. இப்பொழுது இவ்வாலயத்தை மேற்பார்த்து சகல காரியங்களையும் நடத்திவருபவர் வைத்திய சாஸ்திரி மணிசங்கர் கோவிந்த்ஜீ அவர்களின் மூத்த குமாரராகிய எஸ். எம். ஜோஷி பி.ஏ. என்பவராகும். "முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்" என்பதற்கு இவ்வாலயமே ஓர் அத்தாட்சியாகும்.

## சமாச்சாரக் குறிப்புகள்.

கல்கத்தாவில் சட்ட விஷயங்களில் சாமர்த்திய சாலியாகிய டாக்டர் ராஷ்விகாரி கோஷ் என்பவர் கல்கத்தா சர்வகலாசாலை மேன்மேலும் பிரயோஜனகரமாய்ப் பிரகாசிக்கும் பொருட்டு பத்துலட்சம் ரூபாய் மேற்படி சர்வகலா சாலைக்கு தர்மம் செய்துள்ளார். இப்பெருந் தொகையைச் சர்வகலா சாலைச் சங்கத்தார் இன்ன விதமாய் உபயோகிக்க வேண்டுமென்று சிலநிபந்தனைகளும் எழுதிவைத் திருக்கிறார். இவருடைய தர்ம சிந்தனையையும் தானமஹிமையையும் குறித்து நாம் சந்தோஷப் படுவதுடன், இவருக்கு இகத்திலும் பரத்திலும் சுகம் உண்டாகவேண்டுமென்று ஈஸ்வரனை இறைஞ்சுகின்றோம்.

நமது சென்னை மாகாணத்தில் எத்தனையோ கோடீஸ்வரர்கள், லட்சாதிபதிகள் இருந்தும், ஜன்மபூமியின் முன்னேற்றத்திற்குரிய பரோபகார காரியங்களில் சிறிதும் செலவுசெய்யாமல் உண்டு உடுத்து மகிழ்வதே உயிர்வாழ்க்கை யென்று சும்மாயிருப்பதென்னே? வித்தியா விஷயத்தில் தர்மம் செய்தவர்கள், புலால் உடம்பு போயும் புகழுடம்பு பெற்று நிலைத்திருக்கும் பச்சையப்ப முதலியாரைத் தவிர இந்நாட்டில் வேறு எவர்?

* * * *

பெஸண்டு அம்மையாரை நம்மால் மறக்க முடியவில்லை. எவரால் தான்மறக்க முடியும்? புகழும் வசையும் சமமெனக் கருதவேண்டுமென்று பிரசங்க மேடைகளினின்று பேரிடிபோல் கூவுகின்ற இவர்தனக்கு மானநஷ்டம் ஏற்பட்டு விட்டதென்று மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் 'ஹிந்து'.பத்திராதிபர். மீதும் டாக்டர்

நாயர் மீதும் பிரியாதுகள் கொண்டு வந்ததும், மாஜிஸ்டிரேட்டவர்கள் இவ்விருவர் மீதும் குற்றம் ஏற்படவில்லையென்றும், அவர்கள் எழுதியவை பொதுஜன நன்மையைக் கருதியேயென்றும் தீர்ப்பு அளித்த சமாச்சாரம் எல்லோரும் அறிவார். பெஸண்டு அம்மையாருக்கு அந்தரங்க மந்திரியாகிய அருண்டேல் என்பவர் பிரியாது பிரதிகூலமாய் முடிந்ததைக் கண்டு கோபாவேசத்தால் குதித்தார்; மாஜிஸ்டிரேட்டை வெறுத்தார். பெஸண்டு அம்மையாரோ பிரதிவாதிகளின் வக்கீலைப் பழித்தார்; அப்பீல் செய்து ஹைக்கோர்ட்டில் நியாயம் பெறுவதாக ஆர்ப்பரித்தார். இப்பொழுது ஹைக்கோர்ட்டில், டாக்டர் நாயர் குற்றவாளியல்லவென்று மாஜிஸ்டிரேட் செய்த தீர்மானத்தை மாற்றி, பிரியாதை விசாரணை செய்யவேண்டுமென்று மனுச் செய்துகொண்டார். ஆனால் 'ஹிந்து' பத்திராதிபர் மீது கீழ்க் கோர்ட்டில் சுமத்திய குற்றத்தை விசாரிக்க வேண்டுமென்று கேட்கவில்லை. இதற்குக் காரணம் 'ஹிந்து' பத்திராதிபரும் பெஸண்டு அம்மையாரும் சமாதானமாய் விட்டதாக "அடையாறு புல்லெட்டின்" என்ற பத்திரிகையில் கூறபட்டிருந்ததேபோலும்! டாக்டர் நாயர் சமாதான உடன்படிக்கைக்கு இணங்கவில்லையோ? என்னமோ? யாம் அறியோம். ஹைக்கோர்ட்டில் ஜட்ஜி எய்லிங் அவர்கள் மாஜிஸ்டிரேட்டினுடைய தீர்மானத்தையே அச்சாணி வைத்து அறைந்து உறுதிப்படுத்தினார். அன்னி பெஸண்டு அகன்ற அறிவையுடையவர் என்பதிற் சந்தேகம் இல்லை. ஆனால் அவருடைய ஹிருதயம் எம்மட்டிலும் சுத்தமும் குரோத களங்கமற்றதும் பச்சாத்தாபம் நிறைந்ததுமாயுள்ளது என்ற விஷயத்தில் நமக்கு மிகவும் சந்தேகம் உண்டு.

* * * *

விதவா விவாஹ வீரராகிய ராவ்பகதூர் விரசலிங்கம் பந்துலு அவர்கள் பேரில் 'கார்லீலியன்' என்ற ஒருமாத மிருமுறைப் பத்திரிகையின் பத்திராதிபராகிய டி. ஸ்ரீராமலு பி.ஏ. என்பவர் ஒரு மானநஷ்ட வழக்குத் தொடுத்திருக்கிறார். கேஸ் விசாரணையிலிருக்கிறது. ஆதலால் நாம் நமது அபிப்பிராயத்தை நிறுத்தி வைக்கிறோம். ஆனால் 'ஹிந்து' பத்திரிகையில் வெளியாய்க் கொண்டுவந்த வாதியின் நீண்டதோர் வாக்குமூலத்தில் விதவாவிவாக வைதீகராகிய வீரசலிங்கம் பந்துலு அவர்கள் பேரில் விபரீதமாயுள்ள பல வதந்திகள் கூறப்படிருக்கின்றன.

---

# உங்கள் நன்மைக்கே.

நம்
முன்னோர்
களாகிய சாதுக்கள்
அநேகர், இனிப் பிறக்
கும் சந்ததிகள் துன்பத்திற்
கிடமின்றி எல்லோரும் சுகவாழ்
வையும் தீர்க்காயுசையும் பெறும்
படிக்கு அநேக சாஸ்திரங்களை இயற்றி
யருளினார்கள். அவைகளை பொது நன்மைக்கென்றே
ஆராய்ச்சி செய்து ஒரு சிறு புத்தகம் அச்சிட்டுதயார்
செய்திருக்கிறோம். 180 பக்கங்கொண்ட இச்சிறந்த புத்த
கத்தில் பூரண ஆரோக்கிய மென்னும் அரும் பெரும்
பாக்கியத்தை அடையும் வழியைத் தெரிவித்திருக்
கிறது. மதராஸ், 22, பிராட்வே, ஆதங்க நிக்
ரஹ ஔஷதாலயத்துக் குடைய
வராகிய வைத்திய சாஸ்திரி மணி
சங்கர் கோவிந்தஜி அவர்களு
க்கு உங்கள் விலாசத்தை
யெழுதி யனுப்பினால்
புத்தகத்தை இனா
மாகவும்,

தபாற் செலவில்லாமலும் அனுப்புவார்கள்.

* முழம். † அகலம். ‡ முதல்.

# கே-எஸ். முத்தையா அண்டு கம்பெனி.

# பட்டுவர்த்தகம், ஸ்ரீகாசி

## வெண்பட்டுவேஷ்டிகள்.

இந்த வெண்பட்டு வேஷ்டிகள் நேர்த்தியும் சலவை செய்து உபயோகிக்கும்படியான பலமும் மிருதுவும் உள்ளது. சேலம் காஞ்சிபுரம் வேஷ்டிகளுக்குப் போடப்பட்டிருக்கிறமாதிரி அழகான கரைகளுடன் நெசவு செய்யப்பட்டது.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | 2 | கெஜம் | நீளம் | 33. இஞ்சு | அகலம் | விலை ரூபா | 4 | 0 0 |
| (2) | 3 | ,, | ,, | 48 | ,, | ,, | 9 | 0 0 |
| (3) | 3 | ,, | ,, | 54 | ,, | ,, | 10 | 0 0 |
| (4) | $3\frac{1}{2}$ | ,, | ,, | 48 | ,, | ,, | 10 | 0 0 |
| (5) | $3\frac{1}{2}$ | ,, | , | 54 | ,, | ,, | 11 | 0 0 |
| (6) | 4 | ,, | ,, | 48 | ,, | ,, | 11 | 0 0 |
| (7) | 4 | ,, | ,, | 54 | ,, | ,, | 12 | 0 0 |
| (8) | 8 | ,, | ,, | 42 | ,, | புடவை | 22 | 0 0 |

வெண்பட்டு சோமன் ஜோடு 10—6-48 அல்லது 54 இஞ்சு அகலம் விலை ரூபா 24 முதல் ரூபா 30 வரை.

## பித்தளை விளையாட்டுச் சாமான்.

அழகுள்ளது. பளபளப்பும் பலமு முள்ளது. சீமை விளையாட்டுச் சாமான்களைப்போல் சீக்கிரத்தில் அழிந்துபோகக் கூடியதல்ல.

ஜோடிப்பு ஒன்று 32 விதசாமான்கள் அடங்கியது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரிய சயிஸ | ஜோடிப்பு | 1-க்கு | விலை | ரூபா | 3-8-0 |
| மத்திம | ,, | ,, | ,, | ,, | 2-0-0 |
| சிறிய | ,, | ,, | ,, | ,, | 1-8-0 |

## காசி வயிரவர் பிரசாதக் கயிறு.

1. நெம்பர் பெரிய சயிஸ் 100-க்கு ரூபாய் 2-8-0,
2 நெம்பர் 100-க்கு ரூபாய் 2-0-0.

## கஸ்தூரி.

1-நெ. நயமானது கலப்பற்றது. ரூபா எடை விலை, ரூபா 40-0-0.
நயமான காஷ்மீர்தேசத்து குங்குமப்பூ ரூபா எடை
விலை ரூபா 2-2-8.

நயம் பால்காயம் 10 ரூபா எடை விலை ரூபா 1-0-0

சகலவிதமான பட்டுவஸ்திரங்கள் உருத்திராக்ஷ முதலிய விபரமுள்ள கேட்லாக் இனமாக அனுப்புவோம்.

விலாசம்:-கே.எஸ். முத்தையா அண்டு கம்பெனி,
பட்டு வர்த்தகம், ஸ்ரீகாசி.
*BENARES CITY*

